[29th September 1961

9-00 a.m. **Sri M. P. SUBRAMANIAM :** திருச்சி, கோவை இந்த இரண்டு மாவட்டங்களுக்கும் ஒதுக்கப்பட்டிருக்கும் பத்து லட்ச ரூபாயில் செலவு செய்யப்படும் என்று திட்டமிட்டிருப்பதாகச் சொன்னார்கள். இந்த அரசாங்கத்தின் பொறுப்பில் அது செலவிடப்படுமா ? என்னென்ன நகரங்களில் எந்த வகையில் செலவு செய்யப்போகிறார்கள் ? என்னென்ன இனங்களில் அதிலிருந்து செலவு செய்ய உத்தேசித்திருக்கிறார்கள் ?

**The Hon. Sri M. A. MANICKAVELU:** அரசாங்கம்தான் இதைச் செலவு செய்யும். அதற்கு ப்ளான் எல்லாம் தயாரிக்கப்பட்டிருக்கிறது. ஸ்டாப், மற்ற மெடீரியல் இவைகள் எல்லாம் செலவு செய்வதற்கு என்று இரண்டு நகரத்திற்கும் பத்து லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

**Sri A. R. SUBBIAH MUDALIAR :** குற்றாலம் டவுன்ஷிப் கமிட்டிக்கு இந்தப் பிளானிலிருந்து ஒதுக்கப்பட்டிருக்கிறதா ? அப்படி ஒதுக்கப்பட்டிருந்தால் எவ்வளவு தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது ?

DEPUTY SPEAKER : The question relates to municipal towns and not to townships.

**Sri M. KALYANASUNDARAM :** மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் இருபத்திரண்டு நகரங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றன என்று கனம் அமைச்சர் கூறினார். அவற்றுடன் பெரிய நகரங்களைச் சுற்றி இருக்கிற பஞ்சாயத்துப் பிரதேசங்களையும் இத்துடன் சேர்க்கப்படுமா ? மூன்றாவது திட்ட காலத்தில் பெரிய நகரங்களை வளர்ப்பதற்குத் திட்டமிட்டிருப்பதால் அத்துடன் சேர்ந்த பஞ்சாயத்துக்களையும் சேர்த்துக் கொள்ளுவார்களா ?

**The Hon. Sri M. A MANICKAVELU:** திட்டங்களைத் தயாரிக்கும்போது இவைகளெல்லாம் சேர்த்து தயாரிக்கிறார்கள். எது எதையெல்லாம் சேர்க்க சாத்தியப்படுமோ அவைகளையெல்லாம் சேர்த்து அமுலுக்குக் கொண்டுவருவதாக உத்தேசம். டவுன்களுக்கு அருகாமையிலுள்ள பஞ்சாயத்துக்களையும் சேர்த்து, நாற்பது வருஷங்களுக்கு என்ன செய்ய வேண்டுமென்ற உத்தேசமோ அதன்படி செய்யப்படும். டவுன்களுக்குப் பக்கத்திலுள்ள பஞ்சாயத்துக்களையும் சேர்த்துத்தான் ப்ளான் தயாரிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே பஞ்சாயத்துக்களையும் எடுத்துக்கொள்ளப்படும்.

**Sri A. GOVINDASAMY :** ஜில்லா தலைநகரங்களிலும் சரித்திரம் மூலமாக பிரசித்திப்பெற்ற பிரதேசங்களையும் சேர்த்துக்கொள்ளப்படும் என்று கனம் அமைச்சர் சொன்னார். அப்படியானால் கடலூர் நகரமும் இந்தப் பட்டியலில் சேர்த்துக்கொள்ளப்படுமா ?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** ஹெட்குவார்ட்டர்ஸ் எல்லாம் சேர்க்கப்படுவதால் அத்துடன் கடலூரும் ஹெட்குவார்ட்டர்ஸாதலால் அதையும் சேர்த்துக்கொள்ளப்படும். எழுபத்தி ஐந்து லட்சம் ரூபாய் ஒதுக்கியதில் பத்து லட்சத்து இருபது ஆயிரம் ரூபாய் வரையில் **for the preparation of outline plan and master plan for municipal towns**-ம் மற்ற எல்லாவற்றிற்கும்தான் செலவு செய்யப்படும்.

**Sri A. R. SUBBIAH MUDALIAR :** அந்த விபரம் அடங்கியவற்றை இந்த மேஜையின்மீது வைக்கப்படுமா ?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** அந்த விபரம்தான் இப்பொழுது கொடுக்கப்பட்டது. வேறு விபரம் இல்லை.

*Infectious diseases sheds*

* **1907 *Q.*—Sri V. K. KOTHANDARAMAN :** கனம் ரெவின்யூ அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

நகரசபை எல்லைக்குள்ளிருக்கும் சர்க்கார் ஆஸ்பத்திரிகளிலுள்ள நகரசபைக்குச் சொந்தமான தொத்து நோய்களின் ஷெட்டுகளை சர்க்கார் எடுத்துக்கொள்ள உத்தேசமுண்டா ?

29th September 1961]

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

SRI V. K. KOTHANDARAMAN : நகரசபை எல்லைக்குள் இருக்கிற ஆஸ்பத்திரிகள் நீண்டகாலமாக தொத்து நோய்களுக்கு என்று அமைக்கப்பட்டிருக்கிறது. அவற்றில் தொத்து நோயாளிகளை அனுமதிக்கப்பட்டு அங்கு சிகிச்சை கொடுக்கப்பட்டு வருகிறது. அவைகள் நகரசபை எல்லைக்குள் இருப்பதால் நகரசபைகளே கட்டிடங்களைக் கட்டிக் கொடுத்து இருக்கிறது. ஆனால் இன்றையதினம் ஆஸ்பத்திரிகளிலுள்ள தொத்து நோய்கள், அதாவது, காலரா, வாந்தி பேதி போன்ற நோயாளிகள் அனுமதிக்கப்படுகிறார்கள். அங்குள்ள நோயாளிகளுக்கு சிகிச்சைகள் கொடுக்கப்படுகிறது. அவை ரொம்பவும் மோசமாக இருக்கின்றன. கட்டிடங்களும் ரொம்பவும் பழுதடைந்திருக்கின்றன. அதை ரிப்பேர் செய்ய வேண்டுமென்றால் தங்களுக்குப் பொறுப்பில்லை என்று நகரசபைகள் சொல்லிவிடுகின்றன. அவர்களைக் கேட்டால் அரசாங்கம் செய்ய வேண்டும் என்று சொல்லுகிறார்கள். ஆகவே இது எப்படி இருக்கிறது என்றால் இரண்டு ஆட்டில் ஊட்டிய குட்டிபோல் இருக்கிறது. ஆகவே சர்க்காரே எடுத்து அதை நல்ல முறையில் பழுது பார்த்து அதை நல்ல முறையில் உபயோகத்திற்குக் கொண்டுவர நடவடிக்கை எடுத்துக்கொள்வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அவர் ஏதோ இரண்டு ஆட்டைப்பற்றிச் சொன்னார். அது எனக்குத் தெரியாது. அது எனக்குப் புரியவில்லை. அந்தக் கட்டிடங்களை ஸ்தல ஸ்தாபனங்கள் கட்டுவதாக இருந்தாலும் அதற்கு ஐம்பது பர்சென்ட் சப்சிடி அரசாங்கம் கொடுக்கிறது. மற்றவைகள் கொடுப்பது கிடையாது. மெயின்டினென்சுக்கும் அரசாங்கம் அவ்வப்போது உதவி செய்துகொண்டுதான் வருகிறது. அதைக் கட்ட வேண்டிய பொறுப்பு நகரசபையினதுதான். அந்த ஆஸ்பத்திரி நகரசபையில் இருப்பதால் நகரசபை நகர சுகாதாரத்தைக் கவனிப்பதால் நகரசபைதான் எல்லாப் பொறுப்புகளையும் எடுத்துக்கொள்ளவேண்டும். எந்த அளவு அரசாங்கம் உதவி செய்ய வேண்டுமோ அந்த அளவில் செய்து கொண்டுதான் வருகிறது. இப்பொழுது இருக்கக்கூடிய 22 ப்ரைமரி ஹெல்த் சென்டர்களிலும் இப்படிப்பட்ட ஏற்பாடுதான் செய்யப்பட்டிருக்கிறது. அதற்கு வேண்டிய திட்டமும் இடப்பட்டிருக்கிறது. அதற்கு என்று ஒரு லட்சம் ரூபாய்கூட ஒதுக்கப்பட்டிருக்கிறது.

SRI M. K. SOMASUNDARAM : இம்மாதிரி பெரிய தொத்து நோய் ஆஸ்பத்திரிகள் எல்லாம் நகரங்களுக்கு வெளியேயும் சில இடங்களில் நகரத்திலேயும் அமைக்கப்பட்டிருக்கின்றன. சில இடங்களில் ஷெட்கள் அமைத்து அதில் வைக்கப்பட்டிருக்கின்றன. ஊருக்கு வெளியே இருக்கக்கூடியவைகள் நல்ல முறையில் நடப்பதாகத் தெரியவில்லை. அவைகளையும் நல்லமுறையில் நடத்தும்படி சர்க்கார் ஏதாவது உத்தரவு பிறப்பிப்பார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : சில இடங்களில் வெளியே அலாதியாக இருக்கிறது. சில இடங்களில் ஆஸ்பத்திரி காம்பவுண்டுக்குள்ளேயே இருக்கின்றன. இவைகள் ஆஸ்பத்திரிகளுக்கு அருகாமையில் இருப்பதால் அவைகளை எடுத்துக்கொள்ள வேண்டிய பொறுப்பை ஒரு கேள்வியின் மூலமாகப் பதில் அளிப்பதற்கில்லை. இதைப் பற்றிப் பரிசீலனை செய்துதான் பார்க்க வேண்டும். ஆனால் அதை நடத்தும் பொறுப்பு அவர்களிடம் இருக்கிறது. அந்தப் பொறுப்பை அரசாங்கம் ஏற்றுக்கொள்ள முடியாது. கொஞ்சம் கொஞ்சமாகத்தான் அரசாங்கம் அதன் பொறுப்பை எடுத்துக்கொண்டு வருகிறது.

### *Handloom and mill cloths*

* 1908 *Q.*—SRI T. T. DANIEL : SRI N. K. PALANISAMI : } Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) whether the State Government have made any representations to the Central Government to demarcate the sphere of production of textiles between handloom and mills;